# ஸ்ரீ ஸ்தோத்ர சிந்தாமணி



(ஸ்ரீ காமாக்ஷி)

சிந்தித பல பரிபோஷண
    சிந்தாமணி ரேவ காஞ்சி நிலயாமே
சிரதர ஸுசரித ஸுலபா
    சித்தம் சிரயது சித் ஸுகா தாரா

ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ் சர்மா

இரண்டாம் பதிப்பு



நந்தன௵ ஆனிமீ]    [விலை அணா 4

# அவதாரிகை

---

இச்சிறிய நூலுக்கு ஸ்தோத்ர சிந்தாமணி என்று பெயர். ஸ்ரீதேவி உள்ள இடம் சிந்தாமணித்வீபம். சிந்தாமணிக்குஹம். ஸ்வர்க்கத்தில் சிந்தாமணி இருக்கின்றது. சிந்தித்தபயனை அளிப்பதால் அதற்குச் சிந்தாமணி என்று பெயர்.

இதில் பற்பல புராணாதிகளில் உள்ள சிந்தாமணிபோல் பலனைத்தரும் ஸ்தோத்ரங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆதலின் இது ஸ்தோத்ர சிந்தாமணி என கூறப்படுகிறது. சுத்தமான இடத்தில் சுத்தமாக அமர்ந்து பக்தி ச்ரத்தையுடன் கூறியபடி ஜபம் செய்தால் நினைத்த பலன் கைகூடும். நமது பாபம் அதிகமாக இருந்தால் பயன் உண்டாவது தாமதமாகும். பலன் வரும்வரை விடாமல் ஜபம் செய்யவேண்டும். பலனைக் கோராதவரும் நித்யம் இவைகளைப் பாராயணம் செய்தால் பாபமகன்று ஞானமும் அதனால் முக்தியும் உண்டாகும்.

சிகித்ஸையைவிட நோய்வராமல் தடுப்பதே சிறந்தது என்றபடி பாபங்களைச் செய்யாமலிருக்கப் பாபபலனும் செய்த பாபங்கள் அகல சிற்சில ப்ராயச்சித்தமும் கூறப்பட்டுள்ளது. அவைகளை ஒழுங்காகச் செய்து எல்லோரும் துன்பமகன்று இன்பம் பெறவேண்டுமென்பதே நமது நோக்கம். ஸம்ஸ்க்ருத உச்சரிப்பில் தவறில்லாமல் கூறவேண்டும் எனச் சில புதுவழிகள் காட்டப்பட்டுள்ளன. அதைக் கவனித்துப் பிழையின்றி கூறவும்.

க முதலிய வர்க்கங்களில் 4 எழுத்துக்கள் ஸம்ஸ்க்ருதத்தில் உண்டு. அதற்கு முறையே 2 3 4 என எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது. 2 முதல் 4-வது எண்ணிக்கைக்கு உதாரணம் காட்ட தமிழில் சொல் இல்லை.

க2 கர்ஜூரி. க3 கஜம். க4 கனம், (மேகம்.) ச சனிக்கிழமை.

## இரண்டாம் பதிப்பு

இதில் கண்டபடி பாராயணம் செய்து பலனைப்பெற்று நன்றி செலுத்தியவர் பலர். அர்த்தமறிந்து செய்வதே சிறந்தது. 73 சுலோகங்களும் 50 புண்ய பாபபரிஹாரமும் இதில் உள. அன்பர் ஆதரவால் பல விசேஷங்களுடன் இரண்டாம் பதிப்பு வெளியாகிறது.

காரியாலயம்
2/218 தர்புசெட்டி தெரு,
சென்னை 1.

ஆஸ்திகர் அடிபணியும்,
ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா.
சாந்தாச்ரமம்,
2, ஸ்டேஷன்ரோட், மேல்மாம்பலம்,
T. நகர்போஸ்ட், சென்னை 17.

# ஸ்ரீ ஸ்தோத்ர சிந்தாமணி

## விக்நேச ஸ்துதி.

1. ஸுமுக2ச் சைகத3ந்தச்ச கபிலோ க3ஜகர்ணக: ।
லம்போ3 த3ரச்ச விகட: விக்4ந ராஜோ விநாயக: ॥

2. தூ4மகேது: க3ணாத்4யக்ஷ: பா2ல சந்த்3ரோ க3ஜாநந: ।
வக்ர துண்ட3: சூர்ப்ப கர்ண: ஹேரம்ப3: ஸ்கந்த பூர்வஜ: ।

(விநாயக புராணம்.)

இதில் விக்நேச்வருடைய 16 நாமாக்கள் இருக்கின்றன. இவைகளை முதலில் சொல்லிவிட்டு எந்த கார்யத்தை ஆரம்பித்தாலும் அந்த கார்யம் விக்நமின்றி பூர்த்தியாகும்.

## சூன்யம் பார்வை அகல ஸுப்ரம்மண்ய ஸ்துதி.

3. ஸுப்ரம்மண்யச்ச ஸேநாநீ: கு3ஹ- ஸ்கந்தச்ச வாமந: ।
மஹாஸேநோ த்3வாத3சாக்ஷ: விச்வபூ4: ஷண்முக: சிவ: ॥

4. சம்பு4 புத்ரச் ச வல்லீச: தேவஸேநாபதி: ப்ரபு4: ।
சரோத்3 ப4வ: சக்தி புத்ர: ப்ரம்ம பூ4: அம்பிகாஸுத: ॥

5. பூ4தேச: பாவகி: ஸ்ரீமான் விசாக2: சிகி2 வாஹந: ।
கா3ங்கேயச் ச க்3ஜாருட4: சத்ரு ஹந்தா ஷடா3க்ஷர: ॥ (ஸ்காந்தம்.)

இந்த நாமாக்களை ப்ரதிதிநம் காலைமாலைகளில் மூன்று மூன்று முறை ஜபித்தால் சூன்யம் பில்லி பார்வை இவைகளால் உண்டாகும் துன்பமும் பகைவன் பயமும் அகலும்.

## ஜ்வர மகல சிவஸ்துதி.

6. பா3லாம்பி3 கேச வைத்யேச ப4வரோக3 ஹரேதிச ।
ஜபேந்நாம த்ரயம் நித்யம் மஹாரோக3 நிவாரணம் ॥ (ஸ்காந்தம்.)

இம் மூன்று நாமாவை 108 முறை ஜபித்து விபூதி இட்டால் ஜ்வரம் அகலும்.

7. து3ஸ்வப்ந து3ச்சகுந து3ர்கதி தௌ3ர்மநஸ்ய
து3ர்பி4க்ஷ து3ர்வ்யஸந து3ஸ்ஸஹ து3ர்யசாம்ஸி ।
உத்பாத தாபவிஷபீ4திம் அஸத்க்3ரகார்த்திம்
வ்யாதீ4ம்ச் ச நாசயது மேஜகதாம் அதீ4ச: ॥ (பிரும்மோத்தரம்.)

இதை 8 முறை ஜபித்து விபூதி இட்டால் கெட்ட கனவு கெட்டசகுனத்தால் வரும் தீமை தௌர்பாக்யம் துர்பிக்ஷம் துக்கம் கெட்ட கீர்த்தி விஷம் கெட்ட க்ரஹங்களால் உண்டாகும் துன்பம் முதலியன நீங்கும்.

## ஸஹஸ்ர நாம புண்யம்பெற

8. சிவோ மஹேச்வரச்சைவ ருத்ரோ விஷ்ணு: பிதாமஹ: ।
ஸம்ஸார வைத்ய: ஸர்வேச: பரமாத்மா ஸதா சிவ: ॥ (சிவபுராணம்.)

இதை ஒருமுறை ஜபித்தால் சிவஸஹஸ்ரநாம பாராயணம் செய்த புண்ணியம் உண்டாகும்.

## இஷ்டம் பூர்த்தியாக

9. ஏகம் ப்3ரும்மைவ அத்3விதீயம் ஸமஸ்தம் ஸத்யம் ஸத்யம்,
நேஹ நாநாஸ்தி கிஞ்சித் । ஏகோ ருத்ரோ நத்3விதீயாய தஸ்தே2
தஸ்மாத் ஏகம் த்வாம் ப்ரபத்3யே மஹேசம் ॥

இரண்டாக இல்லாமல் ஒன்ருக எங்குமிருப்பது ப்ரும்மம். இதே உண்மை. பலவாகக் காணப்படுவது பொய். ஒன்ருக இருப்பவன் ருத்ரனே. அப்படிப்பட்ட உன்னைச் சரணமடைகிறேன். இதைக் காலையில் சுத்தனுக 108 முறைப் ப்ரதிதிநம் ஜபித்தால் ஒரு மண்டலத்தில் விரும்பிய கார்யம் கைக்கூடும்.

## ஸ்ரீ விஷ்ணுஸ்துதி.

10. அச்யுத அநந்த கோவிந்த நாம உச்சாரண பே4ஷஜாத் ।
நச்யந்தி ஸகலா: ரோக3ா: ஸத்யம் ஸத்யம் வத3ாமி அஹம் ॥
(லலிதோபாக்யாநம்.)

### எல்லா நோயுமகல

இதை 108 முறை ஜபித்து விபூதி இட்டால் நோய் அகலும். நீடித்த நோயானால் 40 நாள் ஜபிக்கவும்.

### கெட்ட கனவு அகல

11. அச்யுதம் கேசவம் விஷ்ணும் ஹரிம் ஸத்யம் ஜநார்த3நம் ।
ஹம்ஸம் நாராயணம் க்ருஷ்ணம் ஜபேத் து3ஸ்வப்ந சாந்தயே ॥
(பிரும்ம வைவர்த்தம்.)

இரவில் தூங்கும்போது இதை 3 முறை ஜபித்தால் கெட்டகனவு தோன்றாது. துஸ்வப்நம் கண்டவர் காலையில் எழுந்தவுடன் ஒருவருடனும் பேசாமல் அந்த கனவைப் பசுவின் காதில் கூறிவிட்டு இதை 3 முறை ஜபித்தால் கெட்டபலன் தோன்றாது.

12. விஷ்ணும் நாராயணம் க்ருஷ்ணம் மாத4வம் மது4 ஸூத3நம் ।
ஹரிம் நரஹரிம் வநீதே3 கோவிந்தம் ததி4 வாமநம் ॥
(வாமந புராணம்)

### பாபமகல

ப்ரதிதிநம் அதிகாலையில் எழுந்தவுடன் படுக்கையில் இதை ஒருமுறை கூறினால் முதல் நாள் செய்த பாபம் நீங்கும்.

### தீராத நோயகல

13. ஓம் நம: பரமார்த்த2ாய புருஷாய மஹாத்மநே ।
அருப ப3ஹுரூபாய வ்யாபிநே பரமாத்மநே ॥ (ஆக்நேயம்.)

இதை ப்ரதிதிநம் காலையில் சுத்தனாக 1008 முறை ஜபம் செய்தால் ஒரு மண்டலத்திற்குள் தீராதமஹாரோகமும் அகலும்.

14. நமஸ்கார: ஸ்ம்ருதோ யக்ஞ: ஸர்வயக்ஞ உத்தம உத்தம: ।
நமாமிஸததம் தேவம் ஸமேதேவ: ப்ரஸீத3து ॥ (பவிஷ்யம்)

நமஸ்காரமே யக்ஞங்கள் எல்லாவற்றிலும் உயர்ந்த யாகம் எனக்கூறி ஸ்வாமி எதிரில் நமஸ்காரம் செய்தால் யாகம் செய்த பலன் உண்டாகும்.

15. பாரம்பரம் விஷ்ணு: அபார: பார பர: பரேப்4ய: பரமாத்மரூபி ।
ஸ ப்3ரம்மபார: பரப4ார பூ4த: பர: பராணும் அபிபாரபூ4த: ॥
(ப்ராம்மம்.)

கறையில்லாத ஸம்ஸாரக் கடலுக்கும் துன்பக்கடலுக்கும் கறையாக உள்ளவர் விஷ்ணு என்ற இதை 3 முறை காலை மாலைகளில் ஜபம்செய்தால் ஸந்த்யாகாலத்தில் செய்யத்தகாத கர்மாவைச் செய்ததால் உண்டாகும் பாபமும் ஸந்த்யாகாலத்தில் செய்யவேண்டிய ஸந்த்யா வந்தநத்தை அகாலத்தில் செய்த பாபமும் நீங்கும்.

யாக பலன் பெற

16. சதுர்பி4ச்ச சதுர்பிச்ச த்3வாப்4யாம் பஞ்சபி4ரேவச ।
ஹூயதேச புநர்த்3 வாப்4யாம் ஸநோ விஷ்ணு: ப்ரஸீத3து ॥
(விஷ்ணு புராணம்.)

ஆச்ராவய அஸ்துஸ்ரௌஷட், யஜ, யேயஜாமஹே வௌஷட். என்றவைகளால் ஹோமம் செய்யப்படும் யக்ஞ ரூபியான விஷ்ணு அருள் புரியட்டும் என்ற கருத்துள்ள இந்த சுலோகத்தைக் காலை மாலை ஸந்த்யாவந்தனமான பின்பு ஒரு முறை ஜபித்தால் ஔபாஸனம் செய்த பலன் உண்டாகும்.

யமபய மகல ஹரிஹரஸ்துதி.

17. நமஸ்யே ஸ்த2ாணும் அநக4ம் நமஸ்யே வநமாலிநம் ।
நமஸ்யே லாங்க3லே சாநம் நமஸ்யேஹம் ச்ரிய: பதிம் ॥ (கூர்மம்.)

சிவனையும் விஷ்ணுவையும் நமஸ்காரம் செய்கிறேன் என்ற இதை ஜபித்து நமஸ்காரம் செய்தால் ஸர்வ பயமும் அகலும்.

18. விஷ்ணோ நிருஸிம்ஹ மது4ஸூத3ந சக்ரபாணே
கௌ3ரீபதே கி3ரிச சங்கர சந்த்ர சூட ।
நாராயண அஸுரநிபர்ஹண சார்ங்கபாணே
த்யாஜ்யா: ப4டா: யஇதிஸந்ததம் ஆமநந்தி ॥ (ஸ்காந்தம்.)

சிவ விஷ்ணு நாமாக்களைப் பேதமின்றி கூறுவோரை ஹிம்ஸிக்காதே என்று யமன் கூறிய ஸ்துதியை ஜபிப்போரை யமகிங்கரர் ஹிம்ஸிக்க மாட்டார்.

### பாப மகல த்ரிமூர்த்தி ஸ்துதி

19. ஸ்ருஜதி விதி4ஸமாக்2ய: ராஜஸேந ஆத்மநா அஸௌ
வஹதி ஹரி ஸமாக்2ய: ஸத்வ நிஷ்ட2: ப்ரபஞ்சம் ।
ஹரதி ஹர ஸமாக்2ய: தாமஸிம் ஏத்ய வ்ருத்திம்
மது4 மத3ந மஹிம்நும் அஸ்தி வேத்தா நகோபி ॥ (ஸ்காந்தம்.)

ரஜோகுணத்தால் ப்ரும்மாவாகி உலகைப் படைக்கிருர். ஸத்வகுணத்தால் விஷ்ணுவாகி உலகை ரக்ஷிக்கிருர். தமோகுணத்தால் ருத்ரனுகி உலகை ஒடுக்குகிருர். மதுஸூதனனுடைய மஹிமையை யாரே அறிவார். இதை 3 முறை ஜபித்தால் மநம் வாய் உடல் இவைகளால் செய்யப்பட்ட பாபம் அகலும்.

### கல்வி வளர தேவி ஸ்துதி.

20. ப4ா ஷ்யாதி3 ஸர்வசாஸ்த்ராணி யேசான்யே நியமா: தத2ா ।
அக்ஷராணிச ஸர்வாணி த்வந்து தேவி நமோஸ்து தே ॥ (கூர்மம்.)

பாஷ்யம் முதலிய ஸகல சாஸ்திரங்களாயும் நியமமாகவும் ஸர்வ அக்ஷரங்களாயும் உள்ள தேவிக்கு நமஸ்காரம். இதைக் காலையில் 3 முறை ப்ரதிதிநம் ஜபித்தால் கல்வி நன்கு வளரும்.

### வச்யம் செய்ய

21. த்ரைலோக்ய மோஹநகாரே த்ரை லோக்ய பரிபூஜிதே ।
த்ரை லோக்யம் தே வசே தேவி த்ரை லோக்யம் மேவசம்குரு, ॥
(சக்தி தந்த்ரம்.)

மூவ்வுலகம் மோஹிக்கும்படியான ரூபமுள்ளவளே மூவ்வுலகாலும் பூஜிக்கப்பட்டவளே மூவ்வுலகையும் வசமாக்கியவளே குறிப்பிட்டவரை எனக்கு வசமாகச்செய். விபூதி அல்லது குங்குமத்தை எதிரில் வைத்துக்கொண்டு அதில் வச்யமாக வேண்டியவரது பெயரை எழுதி 108 முறை ஜபித்து அதை நெற்றிக்கு இட்டுக்கொண்டால் அவர் வச்யம் ஆவர்.

22. விப4ரதியா சிவாஸநே சிவேநஸாகம் அவ்யயா ।
ஹிரண்மயே அதிநிர்மலே நமாமிதாம் ஹிமாத்3ரிஜாம் ॥ (கூர்ம)

மங்களமானதும் ஸ்வர்ணமயமானதும் மிக நிர்மல மாயும் உள்ள ஆஸநத்தில் சிவனுடன் அமர்ந்திருக்கும் தேவியை நமஸ்கரிக்கிறேன். நிநம் இரு வேளைகளிலும் 3 முறை ஜபித்தால் பிறர் வஸ்துக்களில் ஆசை வைப்பதால் உண்டாகும் பாபம் அகலும். (பரஸ்த்ரீகமநதோஷ மகல)

மாரி சாந்தி

23. வந்தேஹம் சீதளாம் தேவீம் ராஸபஸ்தாம் திகம்பராம் ।
மார்ஜநி கலசோபேதாம் விஸ்போ2டகவிநாசி நீம் ॥ (ஆக்நேய.)

கழுதைமீதமர்ந்து வஸத்ரமில்லாமல் கையில் துடப்பம் கலசம் இவைகளைத் தரித்து கொப்பளங்களை அகற்றும் சீதளாதேவியை நமஸ்கரிக்கிறேன். நித்யம் ஜபித்தால் மாரிபயம் வராது. அம்மை போட்டிய காலத்தில் மற்றவர் அவருக்காக ஜலத்தில் நின்று 108 முறை ஜபித்தால் 3 நாளில் அம்மை இறங்கும்.

ஞ்யாபக சக்திக்கு.

24. யாதேவி ஸர்வ பூ4தேஷு ஸ்ம்ருதி ரூபேண ஸம்ஸ்தி2தா ।
நமஸ் தஸ்யை நமஸ் தஸ்யை நமஸ் தஸ்யை நமோநம: ॥
(மார்க்கண்ட)

எல்லா பிராணிகளுடமும் ஞ்யாபகசக்தி வடிவமாக இருக்கும் தேவியை நமஸ்கரிக்கிறேன். இதை நித்யம் 108 முறை காலையில் ஜபித்தால் மறந்து போகும் குணம் அகன்று நல்ல ஞ்யாபக சக்தி உண்டாகும்.

(காலரா) விஷூசி அகல.

25. நமோ பகவதி த்வம்மே விஷ்ணுசக்தி ஹராசு ப4ம் ।
உத்ஸாதய நய க்ஷிப்ரம் தூ3ரேகுரு விஷூசிகாம் ॥ (வாஸிஷ்டம்.)

ஓ விஷ்ணு சக்தியான பகவதியே எனது நோயை அகற்றி விஷூசியை நாசம் செய்து வெகுதூரத்தில் எறி. இதை நித்யம் ஜபித்தால் காலரா வராது. எங்கேனும் இந்

நோய் கண்டால தாம்ப்ர பாத்ரத்தில் ஜலத்தை வைத்து 108 முறை இதை ஜபித்து நோயாளியைக் குடிக்கச் சொன்னல் நோய் அகலும்.

### கண் நோய் அகல.

26. விவர்த்தநோ விவஸ்வாம்ச மார்தாண்டோ3 பா4ஸ்கரோ ரவி: |
லோகப்ரகாசக: ஸ்ரீமான் லோகசக்ஷு: மகேச்வர: ||

27. லோகசாக்ஷீ த்ரிலோகேச: கர்தா ஹர்தா தமிஸ்ரஹா ।
தபந: தாபநச்சைவ சுசி: ஸப்தாச்வ வாஹந: ||

28. க3ப4ஸ்தி ஹஸ்த: ப்ரம்மண்ய: ஸர்வதேவ நமஸ்க்ருத: |
சரீர ஆரோக்3ய த3ச்சைவ த4நவ்ருத்தி4 யசஸ்கர: ||

ஸூர்யனது ஸஹஸ்ரநாமாக்களில் மிகச்சிறந்த நாமாக்கள் இவை. காலையில் ஸ்நாநம் செய்து நித்யம் 12 முறையும் ஞாயிற்றுக்கிழமை மாஸ ஸங்க்ரமணங்களில் 108 முறையும் ஜபத்துடன் நமஸ்காரமும் செய்து சர்க்கரைப் பொங்கல் நிவேதநம் செய்தால் கண்நோயும் மற்ற ஸகல ரோகங்களும் அகலும். (ப்ரும்ம புராணம்.)

### பாலாரிஷ்டம் அகல.

29. ப்ரும்மா விஷ்ணு: சிவ: ஸ்கந்த: கௌரீர்லக்ஷ்மீர்மஹேச்வர: |
ரக்ஷந்து ஜ்வர த3ாஹார்த்தம் முஞ்சந்து ச குமாரகம் || (ஆக்நேயம்.)

ப்ரும்மாதி தேவர்கள் நோயால் பீடிக்கப்படும் இக்குழந்தையைக் காக்கட்டும் என்று 10 முறை ஜபித்து ஓலையில் அல்லது காகிதத்தில் எழுதி தொட்டிலில் அல்லது குழந்தை கழுத்தில் கட்டினல் பால அரிஷ்டம் அகலும்.

### மலடு தோஷம் நீங்க.

30. ப்ராம்மம் பாத்மம் வைஷ்ணவஞ்ச சைவம் பா4கவதம் தத2ா ;
ப4விஷ்யம் நாரதீ3யஞ்ச மார்க்கண்டேயம் அத: பரம் ||

31. ஆக்நேயம் ப்ரம்மவைவர்த்தம் லிங்கம் வாராஹமேவச |
ஸ்காந்தஞ்ச வாமநம் கௌர்மம் மாத்ஸ்யம் க3ாருட மேவச ||
ப்ரும்மாண்டஞ்ச புராணநி படீ2தாம் புத்ரத3ாநிச ||

இந்த 18 புராணங்களின் பெயரை நித்யம் ஒருமுறையும் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷத்வாதசியில் 108 முறையும் ஜபித்தால் மலடு தோஷம் அகன்று புத்ரன் பிறப்பான்.

### ஆண்குழந்தை பிறக்க.

32. கௌஸல்யா அஜநயத் ராமம் ஸர்வ லக்ஷண ஸம்யுதம் ।
விஷ்ணோ: அர்த்த4ம் மஹாப4ாக3ம் புத்ரம் ஐக்ஷ்வாகவர்த்த4நம் ॥

ஸர்வலக்ஷணம் பொருந்தியவரும் விஷ்ணுவின் பாதி பாகமுமான ராமனைக் கௌஸல்யைப் பெற்றாள். ப்ரதிநிதம் 108 முறை இதை ஜபித்து ஸ்ரீராமருக்குப் பாயஸம் நைவேத்தியம் செய்து குழந்தைகளுக்குக் கொடுத்து வந்தால் ஆண்குழந்தை பிறக்கும்.

குறிப்பு:-படிக்கத் தெரிந்தவர் உபதேசம் பெற்று ஸ்ரீராமாயணம் பாலகாண்டம் 18-வது ஸர்க்கம் பாராயணம் செய்வது நலம்.

### சீக்ரம் விவாஹம் ஆக.

33. ஜநகஸ்ய வச: ச்ருத்வா பாணீன்பாணிபி4: அஸ்ப்ருசன் ।
சத்வாரஸ்தே சதஸ்ருணும் வஸிஷ்ட2ஸ்ய மதேஸ்தி2தா: ॥

ஜநகருடைய வார்த்தையைக் கேட்டு வஸிஷ்டர் உத்திரவுபடி ராமன் முதலிய நாலுபேரும் ஸீதை முதலிய நாலு பேருடைய கைகளைப் பிடித்தார்கள். இதைக் கன்யைகளோ அவர்கள் மாதாபிதாக்களோ நித்யம் காலையில் ராமபூஜை செய்து 108 முறை ஜபித்தால் சீக்ரமாக விவாஹம் கைகூடும். சக்தி உள்ளவர் குருமூலம் உபதேசம் பெற்று ராமாயண பாலகாண்டம் 73-வது ஸர்க்கம் பூராவாக பாராயணம்செய்தால் உடனே பலன் உண்டாகும்.

### வைதவ்யம் வராமலிருக்க

34. ஓங்கார பூர்விகே தேவி வீணா புஸ்தக த4ாரிணி ।
வேத3ாம்பிகே நமஸ்துப்4யம் அவைத4வ்யம் ப்ரயச்சமே-(ஸ்காந்தம்)

ஓங்காரத்தை முன்னிட்டவளே வீணை புஸ்தகமிவைகளைத் தரித்தவளான வேதமாதாவே வைதவ்யம் வராமல்

ஸௌமங்கலியாகச் செய். கன்யைகளும் ஸௌமங்கலிகளும் மும்மூன்று முறை ஜபித்தால் தீர்க்க ஸௌமங்கலிகளாக இருப்பார்கள். விதவைகள் ஜபித்தால் மறுபிறவியில் பலன் கிட்டும்.

## வைதவ்ய தோஷம் நீங்க.

35. யன்மூலே ஸர்வதீர்த்தா2நி யன்மத்4யே ஸர்வதேவதா: ।
யத3க்ரே ஸர்வவேதா3ச்ச துளஸீம் தாம்நமாமி அஹம் ॥

எதன் அடியில் எல்லா புண்யதீர்த்தங்களும், நடுவில் ஸர்வ தேவதைகளும் நுனியில் ஸர்வ வேதங்களும் இருக்கின்றனவோ அந்த துளஸியை நமஸ்கரிக்கிறேன். காலையில் குளித்து துளஸீ பூஜை செய்து 12 முறை இதை ஜபித்தால் வைதவ்ய தோஷம் அகலும். (தேவீ பாகவதம்.)

## அச்வமேத பலனைப் பெற.

36. ப்3ருந்தா3 ப்3ருந்தா3வநீ விச்வபூஜிதா விச்வ பாவநீ ।
புஷ்பஸாரா நந்தி3நீச துளஸீ க்ருஷ்ண ஜீவநீ ॥ (தேவீ பாகவதம்)

இந்த 8 நாமாக்களையும் துளஸியின் ஸன்னதியில் 8 முறை கூறினால் அச்வமேத யாகம் செய்த பலன் உண்டாகும்.

## லக்ஷ்மீ கடாக்ஷம் பெற.

37. ஸ்ரீதேவீஹி அம்ருதோத்3பூ4தா கமலாசந்த்ர சோப4நா ।
விஷ்ணுபத்நீ வைஷ்ணவீச வராரோஹாச சார்ங்கி3ணீ ।
ஹரிப்ரியா தேவதேவீ மஹாலக்ஷ்மீச ஸுந்த3ரீ ॥ (ஆக்நேய.)

லக்ஷ்மீஹ்ருதயம் என்ற இதைக் குருமுகமாக உபதேசம் பெற்று அல்லது ஸ்வாமிபடத்தின் அடியில் புத்தகத்தை வைத்து ப்ரதிதினம் காலையில் 10 முறை வெள்ளிக்கிழமை மாலையில் நெய்தீபம் ஏற்றி அதில் லக்ஷ்மீ பூஜை செய்து 108 முறை ஜபித்தால் செல்வம் உண்டாகும். வேலை கிடைக்கும்.

### ஏழ்மை அகல.

38. யதுத்3த்3ப4வா: ஸத்வரஜஸ் தமோகுணா: ஸர்க்க3 ஸ்தி2தி த்4வம்ஸ நித4ந காரிணா: ।
யதி3ச்சயா விச்வமித3ம் ப4வாப4வௌ தநோதி மூலப்ரக்ருதிம் நதாஸ்மதாம் ॥ (பாத்மம்.)

எந்த மூலப்ரக்ருதியினிடமிருந்து உண்டான ஸ்த்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்கள் உலகைப் படைத்து பரிபாலித்து ஒடுக்குகின்றனவோ எவளது விருப்பத்தால் இவ்வுலகும் நல்வினை தீவினைகளைச் செய்கிறதோ அவளை வணங்குகிறோம். நியமத்துடன் இருவேளைகளிலும் 3 முறை கூறினால் தாரித்ர்யம் அகலும்.

### ஸங்கடம் அகல.

39. நமோ மத்ஸ்ய கூர்மாதி3 நாநாஸ்வரூபை:
ஸதா3 ப4க்த கார்ய:உ த்3யதாய ஆர்த்தி ஹந்த்ரே ।
விதா4ர த்ராதி3 ஸர்க்க3 ஸ்தி2தி த்4வம்ஸ கர்த்ரே
க3த3ா சங்க2 பத்3மாரி ஹஸ்தாய தேஸ்து ॥ (பவிஷ்யம்.)

மத்ஸ்யம் முதலிய அவதாரங்களால் பக்தர் துன்பத்தை அகற்றுபவரும் பக்தர் பணியில் ஊக்கமுள்ளவரும் ப்ரும்மாதிகளைக் கொண்டு ஸ்ருஷ்டி முதலியவைகளை நடத்துபவரும் கதை முதலியவைகளைத் தரித்தவருமான உமக்கு நமஸ்காரம். இரு வேளைகளிலும் 3 முறை ஜபித்தால் ஸகலவிதமான ஸங்கடங்களும் அகலும்.

### ப்ராம்மணர்களை வணங்க.

40. விப்ரௌக4 த3ர்சநாத் ஸத்3ய: க்ஷியந்தே பாபராசய: ।
வந்த3நாத் மங்கள அவாப்தி: அர்ச்சநாத் அச்யுதம் பத3ம் ॥

ப்ராம்மணக் கூட்டத்தைத் தர்சித்தவுடன் பாபங்களெல்லாம் அகலும். நமஸ்காரம் செய்தால் மங்களம் உண்டாகும். பூஜித்தால் அழிவில்லாத உயர்பதம் கிடைக்கும்.

இதை ச்ராத்தத்தில் கூறுகிறோம். ப்ராம்மணர்களை வணங்கும்போது இதைக் கூறினால் பாபமகன்று க்ஷேமமுண்டாகும்.

பாதஜலத்தை ப்ரோக்ஷித்துக்கொள்ள.

41. ஸமஸ்த ஸம்பத் ஸமவாப்தி ஹேதவ: ஸமுத்தி2த ஆபத்குல தூமகேதவ:
அபார ஸம்ஸாரஸமுத்ரஸேதவ:புநந்து மாம்ப்ராம்மண பாத பாம்ஸவ:

எல்லா ஸம்பத்தையும் பெறகாரணமானதும் நமக்குண்டாகும் ஆபத்துக்கு தூமகேதுவும் கரையில்லாத ஸம்ஸார ஸாகரத்திற்கு அணையுமான ப்ராம்மண பாத தூளி என்னைப் பாவனமாகச் செய்யட்டும். ச்ராத்தத்தில் பிராம்மணர் காலை அலம்பும்போது இதைக் கூறுவர். நம் வீட்டிற்கு வரும் பிராம்மணர்களுக்கு இதைக் கூறி காலலம்பி சிரஸில் அந்த பாதஜலத்தை ப்ரோக்ஷித்துக்கொண்டால் ஸகல ஆபத்துகளும் அகன்று ஸம்பத் உண்டாகும்.

பித்ருக்களுக்கு அக்ஷய்ய த்ருப்தி அளிக்க.

42. ஸப்த வ்யாத4ா: த3சார்ணேஷும்ருக3ா: காலாஞ்ஜநே கி3ரௌ ।
சக்ரவாகாச் சரத் 3விபே ஹம்ஸாஸ் ஸரஸி மாநஸே ॥

43. யேஸ்ம ஜாதா: குருக்ஷேத்ரே ப்ராம்மணு வேத பாரக3ா: ।
ப்ரஸ்தி2தா: தீ3ர்க்க4ம் அத்4வாநம்யூயம் கிம் அவஸீத3த2 ॥

7 ரிஷிகுமாரர்கள் குருவின் பசுவைக் கொன்று ச்ராத்தம் செய்து புஜித்தனர். அந்த பாபத்தால் வேடர்களாகவும் மான்களாகவும் சக்ரவாகங்களாகவும் ஹம்ஸங்களாகவும் பிறந்து 4 பேர் யோகிகளது புத்திரர்களாகப் பிறந்து, ராஜாவாகவும் மந்திரிகளாகவும் பிறந்த மூவருக்கு இதை நினைவூட்டி நாங்கள் முக்திபெற கிளம்பிவிட்டோம். நீங்கள் ஏன் கஷ்டப்படுகிறீர்கள் என்றனர். இதை ப்ராம்மணுள் புஜிக்கும்போது கூறினுல் பித்ருக்களுக்கு அக்ஷய்யமான த்ருப்தி ஏற்படுகின்றது.

வேதம் ஸந்ததி ச்ரத்தை உண்டாக.

44. த3ாதாரோநோபி4 வர்த்தந்தாம் வேத3ா: ஸந்ததிரேவந: ।
ச்ரத்த4ாச நோ மாவிக3மத் ப3ஹுதே3யஞ்ச நோஸ்து ॥

எனக்குச் செல்வமளிப்பவர், வேதம், ஸந்ததி, ச்ரத்தை, பொருள் ஆகியவை விருத்தியாகட்டும். இதையும் ச்ராத்தத்தில் பித்ருக்களை நாடி வேண்டுகிறோம்.

### அன்னம் விருத்தியாக.

45. அன்னஞ்சநோ ப3ஹு ப4வேத் அதிதீ2ம்ச் ச லபே4மஹி ।
வாசிதாரச்ச நஸ்ஸந்து மாச யாசிஷ்ம கஞ்சந ॥ (மாத்ஸ்யம்.)

அன்னமும் அதிதியும் யாசகரும் நிறையக்கிடைக்கட்டும். நான் யாரையும் யாசிக்காமலிருக்க வேண்டும். இதுவும் ச்ராத்தத்தில் பித்ருக்களை வேண்டும் சுலோகம். இதை நித்யம் ஜபித்தால் அன்னம் முதலியவை விருத்தியாகும்.

### கர்ம பலன் விருத்தியாக.

46. ப்3ரும் மார்ப்பணம்: ப்ரும்மஹவி: ப்ரும்மாக்3நள ப்ரும்மணாஹுதம்
ப்ரும்வமவ தேந க3ந்தவ்யம் ப்ரும்ம கர்ம ஸமாதி4நா ॥

ஹோமம் பிரும்மார்ப்பணம். ஹோமம் செய்தபொருளும் ப்ரும்மமே. ப்ரும்ம அக்னியில் ப்ரும்மாவால் ஹோமம் செய்யப்பட்டது. ப்ரும்மகர்மா இவ்விரண்டின் சேர்க்கையால் அடைய வேண்டியதும் ப்ரும்மமே. இதையும் ச்ராத்த ஹோமம் செய்யும்போது கூறுகிறோம். எந்த கர்மாவைச் செய்தாலும் இதைக் கூறினால் கர்ம பலன் வ்ருத்தியாகும்.

### பித்ருக்கள் முக்தி பெற.

47. அயோத்4யா மது4ரா மாயா காசீ காஞ்சீஹி அவந்திகா ।
பூரீ த்3வாரவதீ க்ஞேயா: ஸப்தைதா: மோக்ஷத3ாயகா: ॥

ச்ராத்தத்தில் பிண்ட பூஜைக்குப் பிறகு இதைக் கூறினால் பித்ருக்கள் மோக்ஷமடைவர். (மாத்ஸ்ய புராணம்)

### கங்கா ஸ்நாநம் பெற.

48. விச்வேசம் மாத4வம் டுண்டும் தண்டபாணிஞ்ச பை4ரவம் ।
வந்தே காசீம் குஹாம் கங்காம் ப4வாநீம் மணிகர்ணிகாம் ॥

இதை நித்யம் ஜபித்தால் காசிக்குப் போகும்படியான பாக்யம் கிட்டும். (காசி கண்டம்.)

### யக்ஷ்ம தர்ப்பணம் செய்ய.

49. யஸ்மயா தூ3ஷிதம் தோயம் சரீர மலஸஞ்சயை: ।
தத்தோ3ஷபரிஹாரார்த்த2ம் யக்ஷ்மாணம் தர்ப்பயாம்யஹம் ॥

எனது உடல்—மலத்தால் யான் ஜலத்தை அசுத்தமாக்கினேன். அந்த தோஷம் அகல யக்ஷ்ம தர்ப்பணம் செய்கிறேன் என்று ஸ்நாநம் செய்தவுடன் கரைமீது இரு கை ஜலம் விட வேண்டும். அப்போதிதைக் கூறுக.

### சிகா ஜலம் விட.

50. லதா விருக்ஷேஷு கு3ல்மேஷு வர்தந்தே பிதரோ மம ।
தேஷாம் ஆப்யாய நார்த்த2ந்து இத3மஸ்து சிகோ2தகம் ॥

கொடிகளிலும் மரங்களிலும் புதர்களிலுமுள்ள எனது பித்ருக்கள் ஸந்தோஷமடைய சிகாஜலமிது என்று ஸ்நாநம் செய்தவுடன் முன்புறமாக தலைமயிரை ஜலம் சிந்தும்படி விடவேண்டும். பின்புறமாக ஜலம் விழுந்தால் அது கள்ளுக்குச் சமம். பாபத்தால் செடி கொடிகளில் தங்கி நிற்கும் பித்ருக்களுக்கு இது மிகவும் சந்தோஷத்தைத் தரும். ஆதலின் சிகையும் சிகை உதகமும் மிக அவச்யம்.

### வேஷ்டி பிழிய.

51. யேகே சாஸ்மத் குலே ஜாதா அபுத்ரா கோ3த்ரஜா ம்ருதா: ।
தே க்3ருஹ்ணந்து மயா த3த்தம் வஸ்த்ர நிஷ்பீட3ன உதகம் ॥

நமது குலத்திலும் கோத்ரத்திலும் பிறந்து புத்ரனில்லாமல் இறந்தவர்கள், துணியின் ஜலத்தை எடுத்துக்கொள்ளட்டும் என்று கூறிப் பூணூலைத் தாவடமாகப் போட்டுக்கொண்டு வஸ்த்ரத்தைப் பிழிய வேண்டும். ப்ரேதத்திற்குப் புது வஸ்த்ரோதகம் கொடுக்கிறோம். இவர்களுக்குப் பழைய வஸ்த்ர ஜலத்தைத் தரவேண்டும். இதுதான் அவர்களுக்குப் போய்ச் சேரும்.

### உண்டபின் எச்சில் ஜலம் விட.

52. ரௌரவே அபுண்ய நிலயே பத்3ம அர்பு3த3 நிவாஸி நாம் ।
அர்த்தி2நாம் உத3கம் த3த்தம் அக்ஷய்யம் உபதிஷ்ட2து ॥

பாபிகளுக்கு இருப்பிடமான ரௌரவ நரகத்தில் பல வர்ஷங்களாக ஜலத்தை யாசிக்கும் ஜீவர்களுக்கு இந்த ஜலம் அக்ஷய்யமாக இருக்கட்டும் என உத்தர ஆபோசந

கிருதி ஜலத்தை இலையைச்சுத்தி வலது புறத்தில் விட வேண்டும்.

### பூமியைச் சுத்தப்படுத்த.

53. அபஸர்பந்து யேபூ4தா: யேபூ4தா: பு4வி ஸம்ஸ்தி2தா: ।
யேபூ4தா: விக்4ந கர்த்தார: தேகச்சந்து சிவ ஆக்ஞயா ॥

பூமியில் இருந்துகொண்டு நற்கர்மாக்களுக்கு விக்நத்தைச் செய்யும் பூதங்கள் சிவனது ஆணையால் விலகட்டும். ஜபம் பூஜை முதலியவைகளைச் செய்ய ஆரம்பிக்கும்போது இதைக் கூறவேண்டும்.

### ஜலத்தைச் சுத்தமாக்க.

54. கலசஸ்ய முகே விஷ்ணு: கண்டே2 ருத்ர: ஸமாச்ருத: ।
குக்ஷௌது ஸாகரா ஸ்ஸர்வே ஸப்த த்வீபா வஸுந்த4ரா ॥

55. ரிக்3 வேதோ3த2 யஜுர்வேத: ஸாமவேதோ3பி அத2ர்வண: ।
அங்கைச்ச ஸஹிதா: வேதா: கலசாம்பு3 ஸமாச்ரிதா: ॥

56. கங்கேச யமுனேசைவ கோ3தாவரி ஸரஸ்வதி ।
நர்மதே3 ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸந்நிதிம் குரு ॥

கலசத்தின் முகத்தில் விஷ்ணு, கழுத்தில் ருத்ரர், வயிற்றில் கடல்கள். பூமி 4 வேதம், அங்கம், எல்லாம் இருக்கின்றன. கங்கே, யமுநே, கோதாவரி, ஸரஸ்வதி, நர்மதே, ஸிந்தோ, காவேரி நீங்கள் இந்த ஜலத்தில் இருங்கள். எல்லா பூஜைகளுக்கும் பொதுவாக அபிஷேகம் ஆசமநம் முதலியவைகள் செய்ய ஜலத்தைச் சுத்தமாக்க வேண்டும். நாலு புறமும் சந்தநமிட்டு இடையில் புஷ்பத்தைப் போட்டு வலது கையால் மூடிக்கொண்டு இதை ஜபிக்கவேண்டும். இந்த ஜலத்தால் தன்னையும் பூஜை ஸாமான்களையும் ப்ரோக்ஷிக்க வேண்டும்.

### மணியை அடிக்க.

57. ஆக3மார்த்த2ந்து தேவாநாம் க3மநார்த்த2ந்து ரக்ஷஸாம் ।
குரு க4ண்டே ரவம் தத்ர தேவதா ஆஹ்வாந லாஞ்சநம் ॥

ஓ மணியே! தேவர்கள் வருவதற்காகவும் அஸுரர் போவதற்காகவும் தேவதைகளை அழைக்க அடையாளமான சப்

தத்தைச் செய் என்று கூறி மணி அடிக்கவேண்டும் அதற்கு முன் சந்தந புஷ்பங்களால் மணியை அலங்கரிக்க வேண்டும்.

சங்க ஜலத்தைச் சுத்திக்கொட்ட.

58. சங்க2 மத்4யே ஸ்தி2தம் தோயம் ப்4ராமிதம் சங்கரோபரி ।
அங்க லக்3நம் மநுஷ்யாணும் ப்3ரும்மஹத்யா அயுதம் த3ஹேத் ॥

சங்கத்தின் இடையிலுள்ள ஜலத்தை ஸ்வாமிக்கு மேல் சுற்றி அது அங்கத்தில் பட்டால் பதினுயிரம் ப்ரும்மஹத்தி தோஷம் அகலும். இதைக்கூறி ஶங்கத்தை இடது கையில் வைத்துக்கொண்டு வலது கையால் மூடி ஸ்வாமி மீது 3 முறை ப்ரதக்ஷிணமாகச் சுத்தி ஜலத்தை அபிஷேக தீர்த்தத்தில் கொட்டி சங்கத்தின் மிகுதியைத் தலையில் ப்ரோக்ஷித்துக்கொள்ள வேண்டும். சங்கத்தின் நுனியில் வெள்ளிப் பூண் போட்டால்தான் சங்க ஜலம் ச்லாக்யம்.

அபிஷேக தீர்த்தம் சாப்பிட.

59. அகால ம்ருத்யு ஹரணம் ஸர்வ வ்யாதி4 நிவாரணம் ।
ஸமஸ்த பாப க்ஷயகரம் சிவ (விஷ்ணு) பாதோ3 த3கம் சுப4ம் ॥

அகால மரணத்தைப் அகற்றி ஸர்வநோயையும் பாபத்தையும் நீக்குகின்றது சிவ (விஷ்ணு) பாதஜலம் என்றுகூறி அதைச் சாப்பிடவேண்டும்.

60. த3ர்சநாத் நிகி2ல கில்பி3ஷாபஹம் ஸ்பர்சநாத் அகி2ல
காமத3ம்சுப4ம் ப்ராசநாச்சபரமார்த்த2 போ3த4கம் சந்த்ரசூட3
[சரணோத3கம் ப4ஜே ॥

பார்த்ததால் பாபத்தை அகற்றுவதும் தொட்டதால் இஷ்டத்தைத்தருவதும் சாப்பிடுவதால் வேதாந்தத்தை அறிவிப்பதுமான சந்த்ரசூடனது பாத தீர்த்தத்தை ஸேவிக்கிறேன்.

பிரார்த்திக்க வேண்டியது.

61. அநாயாஸேந மரணம் விநா தை3ந்யேந ஜீவநம் |
தே3ஹிமே க்ருபயா சம்போ4 த்வயி ப4க்திம் அசஞ்சலாம் ॥

ஆயாஸமில்லாத மரணம் ஏழ்மை இல்லாத பிழைப்பு உம் மிடத்தில் மாறாத பக்தி இவைகளைக்கொடும்.

பகவத் அர்ப்பணம் செய்ய.

62. காயேந வாசா மநஸை இந்த்ரியைர்வா ।
புத்4யா த்மநா வா ப்ரக்ருதே: ஸ்வபாத் ॥
கரோமி யத்3யத் ஸகலம் பரஸ்மை ।
நாராயணாய இதி ஸமர்ப்பயாமி: ॥

உடல் வாக்கு மனம் இந்த்ரியம் புத்தி ஜீவன் ப்ரக்ருதி இவைகளால் எதைச்செய்கின்றேனே அதை எல்லாம் ஸ்ரீ நாராயணனுக்கே அர்ப்பணம் செய்கின்றேன்.

அன்னத்தைத் தர்சித்தவுடன்.

63. அஸ்மாகம் நித்யம் அஸ்து ஏதத்.

நமக்கு இந்த அன்னம் என்றைக்கும் கிடைக்கட்டும் என்று கூறி அஞ்ஜலி செய்யவேண்டும்.

இலையில் அன்னம் வைத்தவுடன்.

64. அன்னபூர்ணே ஸதாபூர்ணே சங்கர ப்ராண வல்லபே ।
க்ஞாந வைராக்ய ஸித்4யர்த்த2ம் பி3க்ஷாம் தே3ஹி ச பார்வதி ॥

சிவனது ப்ராணன் போன்ற ஓ அன்னபூர்ணி தேவி! க்ஞானம் வைரக்யம் உண்டாகும்படி எனக்கும் பிக்ஷை அளி.

சாப்பிட்டவுடன் ஜீர்ணமாக.

65. வாதாபி ரக்ஷோ ப4க்ஷ: ஸ்த்வம் விந்த்4யபர்வத க3ர்வஹா ।
ஸமுத்ர தீர்த்த2 பாநாக ஜீர்ணங்குரு மமாசநம் ॥

வாதாபி எனும் ராக்ஷஸனைப் பக்ஷித்தவரே, விந்த்ய மலையின் கர்வத்தை அகற்றியவரே, ஸமுத்ர ஜலத்தைக் குடித்த அகஸ்த்யரே எனது உணவை ஜீர்ணம் செய்யும். என ஜலத்தைத்தொட்டு நாபியைத் தடவ வேண்டும்.

ப்ரதக்ஷிணம் செய்ய.

66. யானி கானி ச பாபானி ஜந்மாந்தர க்ருதானி ச ।
தானி தானி ப்ரணச்யந்தி ப்ரத3க்ஷிண பதே3 பதே3 ॥

ஜன்மாந்த்ரத்தில் செய்த ஸகல பாபங்களும் ப்ரதக்ஷிணத்தால் அகலட்டும்.

### ஸ்நாநம் ஆரம்பிக்கும்போது.

67. அதிக்ரூர மஹாகாய கல்பாந்த த3ஹநோபம ।
பை4ரவாய நமஸ்துப்4யம் அநுக்ஞாம் த3ாது மர்ஹஸி ॥

மிக க்ரூரமானவரும் பெரிய சரீரம் உள்ளவரும் ப்ரளயாக்னி போன்றவருமான பைரவரே உமக்கு நமஸ்காரம். ஜலத்தில் இறங்கி ஸ்நானம் செய்ய உத்திரவு கொடும்.

### கங்கா ஸ்மரணம்.

68. கங்கே கங்கேதி யோப்3ருயாத் யோஜநாநாம் சதைரபி ।
ஸயாதி ப்3ரும்மண: ஸ்த2ாநம் ப்3ரும்மணா ஸஹ பூஜ்யதே ॥

கங்கே கங்கே என்று கூறுபவன் நூறு யோஜனை தூரத்திற்கு அப்பாலிருந்தாலும் ப்ரும்மலோகத்தை அடைவான். பிரும்மாவுடன் பூஜிக்கப்படுவான்.

### முக்தி இடங்கள்.

69. த3ர்ச்நாத் அப்4ர ஸதஸி ஜநநாத் கமலாலயே ।
காச்யாந் து மரணாத் முக்தி: ஸ்மரணாத் அருணாசலே ॥

சிதம்பர தர்சனத்தாலும் திருவாரூரில் பிறப்பதாலும் காசியில் இறப்பதாலும் திருவண்ணாமலையில் நினைப்பதாலும் முக்தி உண்டாகும்.

### காவேரி மஹிமை.

70. த்ரிராத்ரம் ஜாந்நவீ தோயே ஸப்த ராத்ரந்து யாமுநே ।
ஸத்3ய: புநாதி காவேரீ பாபம் ஆமரணாந்திகம் ॥

3 நாள் ஸ்நானத்தால் கங்கை ஸகல பாபங்களையும் போக்கும். 7 நாளில் யமுனை பாபத்தை அகற்றும். காவேரியோ உடனே, சாகும வரை செய்யும் பாபங்களையும் அகற்றுவள்.

### ஸேது தர்சநத்தில்.

**71.** ரகு3வீர பத3 ந்யாஸ பவித்ரீ க்ருத பாம்ஸவே ।
த3ச கண்ட2 சிரச்சேத3 ஹேதவே ஸேதவே நம: ॥

ஸ்ரீ ராமர் அடி வைத்ததால் பவித்ரமான தூளிகள் உள்ள தும் ராவணன் தலையை அறுக்கக் காரணமாயிருந்தது மான ஸேதுவிற்கு நமஸ்காரம்.

### மஹாபாபங்கள் அகல காயத்ரீ ஸ்துதி.

**72.** ஸாவித்ரீ வேத3மாதாச க3ாயத்ரீ ச ஸரஸ்வதீ
ஸாங்க்ருதீ பி3ராம்மணீ ஸாத்4வீ ஸத3ா ஸர்வ அர்த்த2 ஸாதி4நீ
ஸஹஸ்ராக்ஷீதி நாமாநி ஜபாத் பாப ஹராணிச ॥ (கருடபுராணம்.)

### புண்ய பலன்.

1. துளஸீ வநம் வைத்து வளர்த்தால் பாபம் அகலும்.
2. பிராம்மணர்களைப் பூஜிப்பது ஆபத்தை அகற்றும்.
3. மரங்களை வளர்ப்பது இஹபரசுகத்தைத் தரும்.
4. ஸுமங்கிலீ பூஜை ஸௌமங்கல்யத்தைத் தரும்.
5. குளம் கிணறு வெட்டுவது தாய்க்குப் புத்திரன் பட்ட கடன் தீரும்.
6. அதிதிபூஜை ஸ்வர்க்கத்தைத் தரும்.
7. யாகஸ்நாநம் அல்லது ஸ்வாமி தீர்த்தம் கொடுக்கும் போது செய்யும்ஸ்நாநம் பலத்தையும் அன்னத்தை யும் தரும்.
8. சிவவிஷ்ணு ஆலயம் அமைத்தல் கைலாசத்திலும் வைகுண்டத்திலும் ஸ்திரவாஸமளிக்கும்.
9. ஆலயத்தைப் பெருக்கி மெழுகி கோலமிடுதல் ஸ்வர்க்கத்தைத் தரும்.
10. திலஹோமம் பாபத்தை அகற்றும்.
11. ருத்ரசமகபுருஷ ஸூக்தபாராயணம் பிராம்மண ஜன்மாவை அளிக்கும்.
12. ஸ்ரீஸூக்த பாராயணம் செல்வத்தைத் தரும்.
13. அரசமரம் வைப்பது உபநயனம் செய்வது ப்ரதக்ஷி ணம் செய்வது பாபத்தை அகற்றி புத்ரபாக்கியத் தைத்தரும்.

14. நித்ய ச்ரார்த்தம் பித்ருப்ரீதி. ஸந்தான விருத்திகரம்.
15. உபவாஸமிருத்தல் சரீர சுத்தி.
16. பஞ்சகவ்யம் தோல் எலும்பிலுள்ள பாபத்தை அகற்றும்.
17. பசுவுக்குப் புல் அளித்தல் சொறிதல் ஸந்தானவ்ருத்தி.

---

### 12 மாஸங்களிலும் தானம் செய்ய வேண்டியவைகள்.

1 சித்திரையில் பக்ஷணங்கள் நீர்மோர் விசிறி செருப்புகுடை தத்யோதநம். 2 வைகாசி, பானகம் ஈயப் பாத்ரம் வெல்லம் 3 ஆனி, தேன் 4 ஆடி, வெண்ணெ 5 ஆவணி, தயிர் 6 புரட்டாசி, சர்க்கரை 7 அற்பசி, பரமான்னம் 8 கார்த்திகை, பால் தீபதானம் 9 மார்கழி, பதிர்பேணி பொங்கல். 10 தை, தயிர் ஏடு. 11 மாசி, நெய். 12 பங்குனி, தேங்காய்.

### 7 வாரங்களில் தானம் செய்ய வேண்டியவைகள்

ஞாயர் பாயஸான்னம் சர்க்கரைப் பொங்கல். திங்கள் பால். செவ்வாய் வாழைப்பழம். புதன் வெண்ணெ. வியாழன் சர்க்கரை. வெள்ளி வெள்ளைச் சர்க்கரை. சனி பசும் நெய். ஓராண்டு இதைச் செய்தால் ஸ்வர்க்கம்.

---

### தான பலன்

1. வஸ்த்ர தானம் ஆயுளை விருத்தி செய்யும்.
2. பூமிதானம் ப்ரும்ம லோகத்தைத் தரும்.
3. தேனை வெண்கலப் பாத்ரத்தில் வைத்துத் தானம் செய்தால் புத்ர பாக்யம் உண்டாகும்.
4. கோதானம் ரிஷிக்கடன் தேவக்கடன் பித்ருக்கடன் என்ற மூன்று கடன்களை அகற்றும்.
5. உத்க்ராந்தி கோதானம். ப்ராணன் போகும் ஸமயத்தில் செய்யும் கோதானம் கஷ்ட மில்லாமல் ப்ராணன் போகும்.
6. வைதரணீ கோதானம் இறந்த ஜீவன் வைதரீணீ எனும் மிக கோரமான நதியை சுகமாக கடக்க உதவும்.

7. கர்மாங்ககோதாநம் அந்தந்த கர்மாவைப் பூர்ணமாக ஆக்கும்.
8. நெல்லிக்காய் கோதாநம் ஞானத்தை உண்டுபண்ணும்.
9. தீபதாநம் கண்பார்வை வ்ருத்தி செய்யும்.
10. கோவிலில் தீபதாநம் சக்ரவர்த்தி பதவி கிடைக்கும்.
11. எருமை தாநம் அகால மரணத்தை அகற்றும்.
12. விதை ,, தீர்க்காயுளைத் தரும் தீர்க்காயுளுள்ள ஸந்ததி உண்டாகும்.
13. அரிசி ,, பாபத்தைப் போக்கும்.
14. தாம்பூலம் ,, ஸ்வர்க்கத்தைத் தரும்.
15. பழம் ,, ,,
16. கம்பிளி ,, வாயு ரோகத்தை நீக்கும்.
17. பருத்தி ,, வெண்குஷ்டத்தைப்போக்கும்.
18. பூணல் ,, ப்ராம்மண ஜன்மாவைத்தரும்.
19. புஷ்பம், துளஸீ, ஸமித் கறிகாய், தான்யம், இந்த தாநம் ஸவர்க்கத்தை அளிக்கும்.
20. நெய் தாநம் ரோகம் அகலும்.
21. சர்க்கரை ,, ஆயுள் வ்ருத்தி
22. பால் ,, துக்கம் அகலும்.
23. பக்ஷ்யம் ,, (வடை முதலியன) விக்நத்தை அகற்றும்.
24. வாழைப்பழ தாநம் புத்தி ஸூக்ஷ்மமாகும்.
25. தேன் ,, தேஹ காந்தியையும், அழகையும் தரும்.
26. வெல்லம் ,, சோகம் அகலும்.
27. தேங்காய் ,, கவலை தாபம் அகலும்.
28. பொரி ,, இவ்வுலக சுகம் உண்டாகும்.
29. எள்ளு ,, யமலோக பயம் அகலும்.
30. தயிர் ,, இந்திரிய வ்ருத்தி.
31. அவில் ,, தேவப்ரஸாதம் உண்டாகும்.
32. கடலை ,, ஸந்ததி வ்ருத்தி.
33. ஸத்துமாவு,, பகவத்பக்தி உண்டாகும்.
34. பாயஸம் ,, பித்ரு ப்ரீதி, ஸந்ததி வ்ருத்தி.
35. ஸுவர்ணம்,, பாபம் அகலும், ஏழ்மை அகலும்.
36. குடை, பாதுகை தாநம் யமலோகத்தில் இன்பம் தரும்.

37. கன்யா தானம் ப்ரும்ம லோகம்.
38. விசிறி, பானகம், நீர்மோர், தீர்த்த தானம் மனதிற்கு சாந்தி அளிக்கும்.
39. படுக்கை தானம் ஸுகத்தை அளிக்கும்.
40. ஜபமாலை, ஆஸநம், விபூதி, கோபீசந்தநம் தானம் ஸுககரம்.
41. அன்ன தானம், ஸ்வர்க்கம் உண்டாகும்.

---

### ஸந்ததி தடை செய்யும் பாபமும் ப்ராயச்சித்தமும்

1. குரு, தாய், தந்தைகளை த்வேஷித்தால் ஸந்ததி வ்ருத்தி யாகாது. ஸ்வர்ணத்தால் க்ருஷ்ண விக்ரஹம் செய்து தானம் செய்தால் ஸந்ததி உண்டாகும். அந்த பாபம் அகலும்.

2. கன்றையும் பசுவையும், பிள்ளையையும் தாயையும் பிரித்தால் ஸந்ததி உண்டாகாது. பூமி தானம் கோதானம் செய்தால் இந்த பாபம் அகன்று ஸந்ததி விருத்தியாகும்.

3. குழந்தைகளை மிறட்டுவது அடிப்பது அவர்களுக்குக் கொடுக்காமல் அவர்கள் எதிரிலேயே ஒன்றைத் தின்பது இதனால் ஸந்ததி தடைபடும். ஸேதுஸ்நானம் செய்து விளையாட்டுச் சாமான்களை (சோழி மரப்பாச்சி முதலியவைகளை) குழந்தைகளுக்குத் தானம் செய்ய வேண்டும்.

4. பிறர் குழந்தைகளை வ்ரணம் உண்டாகும்படி அடிப்பது, ப்ராணி மூட்டைகளை உடைப்பது இந்த பாபத்தாலும் ஸந்ததி வளராமல் தடைபடும். புராணம் கேட்பதாலும் வெள்ளிக்ருஷ்ண ப்ரதிமை தானம் செய்வதாலும் இந்த பாபமகலும்.

5. ஜலத்தில் முழுகி இறக்கும் பிராணிகளைக் காப்பாற்றுவிடிலும் எருதுக்களுக்கு காய் அடிப்பதாலும் ஸந்ததி தடைபடும். கோதானம் விருஷபதானம் கோபூஜை ப்ரதிதிநம் காலையில் ஸ்நானம் செய்து மௌனமாய் பிறர் பசுவுக்கு ஒருபிடி பில் ஓராண்டு கொடுத்தாலும் அந்த பாபம் அகலும்.

6. நல்ல ஸர்பங்களை அடித்துக் கொல்வதாலும் ராகு கேதுக்களது தோஷத்தாலும் பித்ருக்களது சாபத்தாலும் ஸந்தானம் உண்டாகாமல் போகும். நாகப்ரதிஷ்டை ஸர்ப்பசாந்தி செய்தால் அந்த பாபம் அகலும்.

7. அதிதிக்கு அன்னமிடாமை, ப்ராம்மணரை அடிப்பது இவைகளால் ஸந்ததி உண்டாகாமலிருக்கும். அதிதி பூஜை ப்ராம்மண பூஜைகளால் அந்த பாபம் அகலும்.

8. அமாவாஸ்யை மாஸஸங்க்ரமணம் முதலிய புண்யகாலங்களில் தர்ப்பணம் செய்யாவிடில் ஸந்ததி உண்டாகாது. அக்காலங்களில் தர்ப்பணம் செய்வதுடன் தம்பதிகளாக உட்கார்ந்து ஹரிவம்சம் என்ற இதிகாஸத்தைப்பாராயணம் செய்து அர்த்தம் கேட்டால்பாபமகலும்.

9. ப்ராம்மணனது ஜீவனத்திற்குள்ளசொத்தை அபஹரிப்பதால் ஸந்ததி தடைபடும். ஒரு தேவாலயப்ரதிஷ்டை அல்லது அச்வத்தப்ரதிஷ்டை செய்து பூணல் போட்டால் அந்த பாபம் அகலும்.

இதில் எந்த பாபத்தை நாம் முற்பிறவியில் செய்தோம் என்று இப்போது நமக்குத் தெரியாதல்லவா? ஆதலால் நல்ல ஜோஸ்யரை அடுத்து ஜாதகத்தைக் காட்டினுல் இன்னதோஷம் எனக்கூறுவர். அதன்படி ஒரு சிறு அங்கங்கூட விடாமல் ச்ரத்தையுடன் அதை அநுஷ்டித்தால் பயன் உண்டாகும். ஸந்ததி வ்ருத்தியாகும்.

---

## பொதுவான விதி.

ஜாதகமில்லாதவர், ஜாதகத்தைப்பார்க்க வஸதி இல்லாதவர் அடியிற்கண்டவைகளில் ஒன்றை; முடிந்தால் எல்லாவற்றையும் பின்பற்றினுல் பலனுண்டாகும்.

1. கணேசரைப் பூஜித்து ஒரு சங்கு அளவு பசும் பால் அருந்தி சதுர்த்தி வ்ரதமிருப்பது அல்லது ஷஷ்டியில் சுப்ரமண்ய பூஜை செய்து உபவாஸமிருந்து மறுநாள் ஒருவருக்கு அன்னமிட்டுப் பாரணே செய்தல், சதுர்த்தியில் விக்நேச்வர மந்திரத்தைக் குருமுகமாக உபதேசம் பெற்று ஜபித்து விக்நேச பூஜையை வந்நி இலை அருகம்புல்களால்

செய்ய வேண்டும். ஸுப்ரமண்ய் மந்த்ரோபதேசம் பெற்று ஷஷ்டியில் முருகனைப் பூஜித்து உபவாஸமிருக்கவேண்டும்.

2. பஞ்சாக்ஷரி உபதேசம் பெற்று ப்ரதோஷ உபவாஸம் ப்ரதோஷ பூஜை செய்தால் ஸந்ததி உண்டாகும்.

3. குருவின் மூலம் ஸந்தானகோபால மந்த்ர உபதேசம் பெற்று தொட்டிலுடன் க்ருஷ்ண விக்ரஹத்தை ஓராண்டு நித்யம் பூஜை செய்து முடிவில் ஸத்புருஷனுக்குத் தானம் செய்ய வேண்டும். இவைகளைத் தம்பதிகளாகச் செய்வதே நலம்.

4. பெண்கள் காலையில் ஸ்நானம் செய்து ஒன்றும் சாப்பிடாமல் உபநயனம் ஆன அச்வத்த விருக்ஷத்தை நித்யம் 108 முறை ஒரு மண்டலம் ப்ரதக்ஷிணம் செய்துவர வேண்டும். ஒவ்வொரு ப்ரதக்ஷிணத்திலும் அரசின் அருகே ஒரு கண்ணாடியை வைத்து நமஸ்காரம் செய்து எழுந்திருக்கும்போது கண்ணாடியில் அரசின் நிழலைத்தரிசிக்க வேண்டும். சனிக்கிழமை ஒருநாள் தான் அச்வத்தத்தைத் தொட்டு அபிஷேகம் செய்யவேண்டும். ஆலிங்கனம் செய்துகொள்ள வேண்டும். தினம் எள்ளுருண்டை நிவேதனம் செய்து பாதி விநியோகம் செய்ய வேண்டும்.

5. புருஷர்கள் ஸ்ரீமத் ராமாயண உபதேசம் பெற்று நித்யம் பாயஸ தானம் முதல் அவதார கட்டம்வரை பாராயணம் செய்து பாயஸ நிவேதனம் செய்து அதை மனைவிக்கும் குழந்தைகளுக்கும் அளிக்க வேண்டும்.

6. புருஷர்கள் நித்யகர்மாவை அநுஷ்டித்தபின் புருஷஸூக்தத்தை ஒரு தீர்த்த பாத்ரத்தைத் தொட்டுக் கொண்டே ஜபம் செய்து அந்த தீர்த்தத்தைத் தானும் அருந்தி மனைவிக்கும் அளிக்க வேண்டும்.

7. ஏகாதசி உபவாஸமிருந்து த்வாதசி பாயஸ தானம் செய்தல்.

### கர்ப்பமாக இருக்கும்போது நடுவில் கறைந்து போவது

புராணக்கதை, பூஜை, ஜபம் இவை நடுவில் எழுந்திருப்பதாலும் தோய்த்த பாலைத் தயிராவதற்குள் எடுப்பதாலும் பிறர் கர்ப்பத்தைக் கறைப்பதாலும் சுமைக்கூலி

தராததாலும் கர்ப்பம் பூர்ணமாகாமல் இடையே கரைந்து போகும்படி நேரிடுகிறது.

ஸ்ரீராமாயண கதையைப் ப்ரதிதிநம் விடாமல் கேட்பதாலும் தேவபூஜை முடியும்வரை எழுந்திருக்காமல் உட்கார்ந்து தர்சிப்பதாலும் தன்தலையால் சுமக்க முடிந்த அளவு தான்யத்தைச் சுமந்துபோய் நாற்சந்து கூடுமிடத்தே வைத்துவிட்டுத் திரும்பிப்பாராமல் வருவதாலும் அந்த பாபம் அகன்று குழந்தை பிறக்கும்.

## குழந்தை பிறந்து பிறந்து இறத்தல்.

ஜன்மாந்தரத்தில் நாம் வாங்கியகடனைத் திருப்பிக் கொடுக்காவிடில் அந்தக் கடனை வட்டியுடன் வாங்கும் வரை கடன்காரன் குழந்தையாக இருந்து எண்ணைப்பால் மருந்து தேக ஆயாஸம் இவைகளின் மூலமாகக் கடனை வாங்கிக்கொண்டு இறந்துவிடுகிறான். வாங்கிய கடனை த்ரோகம் செய்யக் கூடாது. தங்கப் பூணல் செய்து சக்தி இல்லாவிடில் வெள்ளிப் பூணல் செய்து ப்ரதி பௌர்ணமியிலும் தாநம் செய்தால் இந்த பாபம் அகலும். குழந்தை தீர்க்க ஆயுள் உள்ளதாக இருக்கும்.

## அல்பாயுஸ் தோஷமகல.

பிறர் அன்னத்தை அடிக்கடி புஜிப்பது, பிறர் மனைவியை விரும்புவது, தானே ஆஸனத்தைப் போட்டுக் கொள்வது, தானே எண்ணெய் தேய்த்துக் கொள்வது, தானே ஆபோசநம் போட்டுக் கொள்வது, ஔபாஸநாதிகளை விடுவது முதலிய பாபங்களால் அகாலமரணம் அல்பாயுஸ் முதலிய தோஷங்கள் உண்டாகின்றன.

நித்யம் ஆயுஸ்ஸூக்த பாராயணம் செய்வது சிவார்ச்சனை செய்வது நோயாளிக்கு மருந்து வாங்கி அளிப்பது ம்ருத்யுஞ்ஜய ஸூக்தம் ஜபிப்பது பெரியோரை நித்யம் நமஸ்கரிப்பது ஆசாரத்தை அநுஷ்டிப்பது ஆஹாரத்தில் நியமத்தைக் கைகொள்வது புருஷர்களானால் ஸந்த்யா வந்தனத்தை அர்த்தம் அறிந்து அனுஷ்டிப்பது முதலியவைகளைச் செய்தால் தீர்க்காயுஸ்ஸைப் பெறலாம்.

**சுபம் ! சுபம் !! சுபம் !!!**

## விடத்தக்க பாபங்கள்.

1. பிறருக்கு ஹிம்ஸை செய்வது.
2. பிறரை நிந்திப்பது.
3. பிறர் சொத்தை அபஹரிப்பது.
4. பிறர் மனைவியிடம் ஆசைவைப்பது.
5. ஸ்வகர்மாவை விடுவது.
6. சாஸ்த்ரம், கூடாதென்ற கார்யத்தைச் செய்வது.
7. அருணோதயத்தில் தூங்குவது.
8. பகலில் தூங்குவது.
9. பல்லால் நகத்தைக் கடிப்பது.
10. ஸ்நாநம் செய்யாமல் சாப்பிடுவது.
11. ஜபம் செய்யாமல் உண்பது.
12. ஸ்வாமிக்கு நிவேதநம் செய்யாமல் சாப்பிடுவது.
13. அதிதிக்கு அன்னமிடாமல் சாப்பிடுவது.
14. தைவத்தை நிந்திப்பது.
15. பெரியோர் வந்தவுடன் எழுந்து வணங்காமலிருப்பது.
16. ஏகாதசியில் சாப்பிடுவது. தாம்பூலம் தரிப்பது.
17. பெண்களைக் காரணமின்றி நிந்திப்பது அழவைப்பது
18 ஸந்த்யாகாலத்தில் படுப்பது உண்பது உறங்குவது.
19. தம்பதிகளைக் கலகம் செய்வது சுலைப்பது.
20. நின்றுகொண்டே மலஜலம் கழிப்பது.
21. நின்றுகொண்டே தீர்த்தம் சாப்பிடுவது.
22. வடக்கு புறம் தலைவைத்துப் படுப்பது புசிப்பது.
23. ஜலத்தில் காரித்துப்புவது, மலஜல விஸர்ஜநம் செய்வது.
24. நெற்றிக்கு இடாமல் இருப்பது.
25. பகலில் பாலும் இரவில் தயிரும் சாப்பிடுவது.
26. இரு கரங்களாலும் தலையைச் சொறிவது.
27. சூர்யன் கோவில் பசு இவர்களுக்கு எதிராக மலஜலங் கழித்தல்.

28. காலால் காலைத்தேய்த்து அலம்புவது.
29. தீபம் மணி தர்ப்பம் முத்து ரத்னமாலை இவைகளைப் பூமியில் வைப்பது.
30. பெரியோரை நீ என அழைப்பது.
31. தூங்குபவரை எழுப்புவது.
32. குளத்தில் கல்லை எரிவது, மலங்கழித்து கால் அலம்புதல்.
33. உதயத்திலும் அஸ்தமனத்திலும் சூர்யனைப் பார்ப்பது.

ஸ்வஸ்திப்ரஜாப்4ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேந மார்க்கே3ண மஹீம் மஹீசா: ।
கோ3ப்ராம்மணேப்4ய: சுப4மஸ்து நித்யம்
லோகாஸ ஸமஸ்தா: ஸுகி2நோப4வந்து ॥

காலே வர்ஷது பர்ஜன்ய:
ப்ருதிவீ ஸஸ்ய ஶாலினீ
தேசோயம் க்ஷோபரஹித:
ப்ராம்மணா: ஸந்து நிர்பயா:

க்ருஷ்ணார்ப்பண மஸ்து.



The Progressive Printers, Madras 1.

விச்வாநரன் என்ற ப்ராம்மணன் இதைப் பாராயணம் செய்து வைச்வாநரன் என்ற புத்ரனைப் பெற்றார். ஸ்காந்தம் காசிகண்டம் 10-வது அத்யாயம்.

## அபிலாஷாஷ்டகம்

1. ஏகம் ப்ரும்மைவ அத்விதியம் ஸமஸ்தம்
ஸத்யம் ஸத்யம் நேஹ நாநாஸ்தி கிஞ்சித்
ஏகோ ருத்ரோ நத்விதீயாய தஸ்தே2
தஸ்மாத் ஏகம் த்வாம் ப்ரபத்3யே மஹேசம்

2. ஏக: கர்த்தா த்வம்ஹி ஸர்வஸ்ய சம்பே4ா
நாநா ரூபேஷு ஏகரூபோஸி அரூப:
யத்வத் ப்ரத்யப்ஸு அர்க்க ஏகோபி அநேக:
தஸ்மாத், நாந்யம் த்வாம், விநேசம், ப்ரபத்3யே:

3. ரஜ்ஜௌ ஸர்ப்ப: சுக்திகாயாஞ்ச ரூப்யம்
நைர: பூர: தன்ம்ருக3ா க்2யே மரீசௌ
யத்3வத் தத்3வத் விஷ்கே3 ஷ: ப்ரபஞ்ச:
யஸ்மின் க்ஞாதே தம் ப்ரபத்3யே மஹேசம்

4. தோயே சைத்யம் த3ாஹ கத்வஞ்ச வஹ்னௌ
தாபோ ப4ாநௌ சீத ப3ாநௌ ப்ரஸாத3:
புஷ்பே க3ந்த4: து3க்3த4 மத்4யேபி ஸர்பி:
யத்தத் சம்போ த்வம் தத: த்வாம் ப்ரபத்3 யே

5. சப்தம் க்3ருண்ணஸி அச்ரவா: த்வம்ஹி ஜிக்4ரே:
அக்4ராண: த்வம் வ்யங்க்4ரி: ஆயாஸி தூராத்
வ்யக்ஷ: பச்யே: த்வம் ரஸக்ஞோபி அஜிஹ்வ:
க: த்வாம் ஸம்யக் வேத்தி அத: த்வாம் ப்ரபத்3யே

6. நோ வேத:த்வாம் ஈச ஸாக்ஷாத் விவேத3
நோவா விஷ்ணு: நோவித4ாதா அகி2லஸ்ய
நோயோகீ3ந்த்ரா: நேந்த்3ர முக்2யாச் சதேவா:
ப4க்தோ வேத3 த்வாம் அத: த்வாம் ப்ரபத்3யே

7. நோதே கே3ாத்ரம் நேச ஜன்மாபி நாக்2யா
நோவா ரூபம் நைவ சீலம் நதே3ச:
இத்த2ம் பூ4தோபி ஈச்வர: த்வம் த்ரிலோக்யா:
ஸர்வான் காமான் பூரயே: தத் ப4ஜே த்வாம்

8. த்வத்த: ஸர்வம் த்வம்ஹி ஸர்வம் ஸ்மராரே
த்வம் கௌ3ரீச: த்வம் ச நக்3ந: அதிசாந்த:
த்வம் வை வ்ருத்த4: த்வம் யுவா த்வஞ்ச ப3ால:
தத்வம் யத்கிம் நாஸி அத: த்வாம் நதோஸ்மி